ஒருநாள் நடுப் பிள்ளையாண்டான் ஒன்று சொன்னான்.

"அப்பா, காலம் மாறிக்கொண்டேயிருக்கிறது. தன் ரீதிப்படியே பின் சந்ததியும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது சாத்தியமல்ல, நியாயமுமல்ல, இயற்கைக்கே விரோதம். அப்படியே இருந்திருந்தால் மின்சாரம் கிடைத்திருக்குமா, டிரெய்னேஜ் உண்டா, ரயில், ஏரோப்ளேன், அணுசக்தி, பைபாஸ் ஸர்ஜரி, சினிமா, டி.வி. இன்னும் வரப்போவது எது எதுவோ, அத்தனையும் உண்டா? தற்சமயத்துக்குச் சந்திர மண்டலம் கொல்லைப் புறமாகி விட்டது. எதையுமே நிறுத்தி வைப்பதற்கில்லை. நிறுத்தி வைக்க முடியாத சூழ் நிலைக்கு ஏற்றபடி மனித ரஸாயனமும் மாறிக்கொண்டு தானிருக்கும். மாற்றம் தான் உயிரின் வழி. முன்னேற்றத் தின் தைரியம்.

"இத்தனைக்கும் நடுவில் ஹிரோஷிமா, பூகம்பம், சமுத்திரம் கரை புரண்டது, எரிமலையின் கக்கல், ஹோல்ஸேல் கணக்கில் அல்வாத், துண்டாய் உயிர் விழுங்கல். பூமியின் நிலப்பாகமே நகர்ந்துகொண்டிருக் கிறது. இவையெல்லாமே முன்னேற்றத்தைச் சேர்ந்தது. வேர் விட்டுப்போன விருக்ஷத்தில் ஒரு விழுதைப் பிடித் துத் தொங்கிக்கொண்டு, நீ என்னைப் பிடித்துக்கொண்டு தொங்கு என்றால், அது நடக்கிற காரியமா?"

சிரிக்கிறான். கேலி இந்தச் சந்ததியின் பாஷை.

ஆனால், வார்த்தை யென்று கொண்டால், சிந்திக்கத் தக்கதே.

இந்த நிலைக்கும் சாக்ஷியாக, புராண காலமாக நின்ற இடத்தில் நின்றபடி, உதட்டோரங்களில் குழிந்த புன்முறுவலால் அகிலத்தை ஆட்சி புரிந்துகொண்டு–

அவள் நிற்கிறாள்.



